# மாரத்தான் போட்டி – அரசு பள்ளிகளுக்கு புரவலர் நிதி வழங்கிய தருணங்கள்...



திரு. ம. சொக்கலிங்கம் செட்டியார்,
திரு. மு. இராமலிங்கம் மற்றும்
வா.புதூர் அரசு மேல்நிலைப் பள்ளி தலைமை ஆசிரியர்



திரு. சே. தவசீலன், முன்னாள் ஊ.ம. தலைவர்,
புரவலர் திரு. S. அசோகன் மற்றும் கட்டுக்குடிபட்டி
அரசு மேல்நிலைப் பள்ளி தலைமை ஆசிரியர்



திரு. மு. சாமிநாதன் முன்னாள் பொ.ந.ச. செயலாளர்,
திரு. இராமநாதன் செட்டியார் மற்றும்
புழுதிபட்டி அரசு மேல்நிலைப் பள்ளி தலைமை ஆசிரியர்



திரு. மாணிக்கம்செட்டியார் அ.வ.ந. சங்கத் தலைவர்
மற்றும் கிருக்காக்கோட்டை
அரசு மேல்நிலைப் பள்ளி தலைமை ஆசிரியர்




திரு. மு. பாலகிருஷ்ணன் செட்டியார் மற்றும்
சிங்கம்புணரி
அரசு துவக்கப் பள்ளி தலைமை ஆசிரியர்



திரு. செ. ஆசை அலங்காரம் முன்னாள்
க.வ.க.தலைவர் மற்றும் சிறுகுடி
அரசு மேல்நிலைப் பள்ளி தலைமை ஆசிரியர்

# பத்தாம் ஆண்டு நினைவஞ்சலி

## எங்களை வாழவைக்கும் தெய்வம்

தோற்றம்
23-09-1934

மறைவு
08-05-2015



**தெய்வத்திருமதி மு. தேனம்மாள் ஆச்சி**
**V. புதூர்**

(க/பெ. மு. மயி. முத்துச்சாமி செட்டியார் என்ற சேது செட்டியார்)

இம்மண்ணுலகை விட்டு மறைந்தாலும் உங்கள் ஆசியுடன் நினைவில் வாழும்

கணவர்: திரு மு. மயி. முத்துச்சாமி செட்டியார் மற்றும்
மகன்கள், மகள்கள், பேரன், பேத்திகள், V. புதூர்




# இரத்தக் கொதிப்பு

இ. விஜய் அலங்கார் B.E., திண்டுக்கல்

**இரத்தக் கொதிப்பு என்றால் என்ன?**

இரத்தம் உடல் முழுவதும் செல்வதற்கு ஒரு குறிப்பிட்ட அளவு அழுத்தம் தேவை. இந்த அழுத்தம் அதிகமாகும்போது அதையே இரத்தக் கொதிப்பு என்கிறோம்.

**இரத்தம் அழுத்தம் எவ்வாறு இருக்கலாம்?**

இரத்த அழுத்தத்தில் சுருக்கழுத்தம் (Systolic blood pressure) விரிவழுத்தம் (Diastolic blood pressure) என இரண்டு அலகுகள் உள்ளன. 2-வது வகையில் உள்ளவர்கள் இரத்தக் கொதிப்பு வராது தடுக்க வேண்டுமானால் உணவு மற்றும் வாழ்க்கை முறையில் அதிகக் கவனம் செலுத்த வேண்டும். அதிக இரத்த அழுத்தத்தைக் குறைப்பதற்கு உணவில் பொட்டாசியம், மெக்னீசியம், கால்சியம் ஆகிய தனிமங்கள் அதிக அளவிலும், கொழுப்பு குறைவான அளவிலும் இருக்க வேண்டும்.

**இரத்த அழுத்தத்தை ஏற்படுத்தக்கூடிய காரணிகள் என்ன?**

இயற்கையாகவே வயது ஆக ஆக இரத்த நாளங்கள் அதனுடைய ஜவ்வுத் தன்மையை இழப்பதால், நாளங்களின் அகலம் குறுகி இரத்த அழுத்தம் அதிகரிக்கிறது. மரபணுக்களால் மட்டுமின்றி, அதே உணவு, உடற்பயிற்சியின்மை, புகைபிடித்தல் என்று பெற்றோர் வாழ்ந்த சூழ்நிலையிலேயே வாழும்போது குழந்தைகளுக்கும் அந்த நோய்கள் வரும் வாய்ப்பு அதிகமாகிறது. தற்போதைய வாழ்க்கை முறையில் அதிக இரத்த அழுத்தத்திற்கு மன அழுத்தமே முக்கியக் காரணமாகக் கருதப்படுகிறது.

உடல் எடை அதிகரிப்பைப் பொறுத்து இரத்த அழுத்தம் வரும் வாய்ப்பு அதிகரிக்கிறது. மேலும் 1. உணவில் அதிகம் உப்பு சேர்த்துக் கொள்ளுதல். 2. அதிகக் கொழுப்பு மற்றும் குறைவான நார்ச் சத்துள்ள உணவுகள் 3. மது மற்றும் புகைப் பழக்கம்.

4. சரியான உடற்பயிற்சி இன்மை. 5. நீரிழிவு நோய். இவைகளாலும் இரத்த அழுத்தம் ஏற்பட வாய்ப்புள்ளது.

**இரத்த அழுத்தம் வருவதற்கான அறிகுறிகள்:**

பொதுவாக இது எந்தவித அறிகுறிகளையும் ஏற்படுத்துவதில்லை. மற்ற பல காரணங்களுக்காக உடலைப் பரிசோதிக்கும்போது இது கண்டுபிடிக்கப்படுகிறது. எனினும் சிலருக்கு இரத்த அழுத்தம் அதிகமாகும்போது தலை சுற்றல், தலைவலி போன்றவை ஏற்படலாம்.

**இரத்த அழுத்த நோயால் ஏற்படும் விளைவுகள் :**

மாரடைப்பு, இதயத் துடிப்பில் கோளாறு, இதயம் பெரிதாகுதல், பக்கவாதம், மூளையில் இரத்தக் கசிவு, இரத்த நாளங்களில் நோய்கள், சிறுநீரகத்தில் பாதிப்பு மற்றும் கண்களில் பாதிப்பு போன்றவை.

**சிகிச்சை முறைகள் :**

இரத்தக் கொதிப்பு உள்ளவர்கள் மருத்துவரை அணுகி, பரிசோதித்து தவறாது மருந்துகள் உட்கொள்ள வேண்டும். 40 வயதுக்கு மேற்பட்டவர்கள் ஆறு மாதங்களுக்கு ஒருமுறை தவறாது இரத்த அழுத்தத்தைப் பரிசோதனை செய்து கொள்ள வேண்டும். இரத்தத்தில் சர்க்கரை மற்றும் கொழுப்பின் அளவைக் கட்டுப்பாட்டில் வைத்திருப்பது அவசியம். கர்ப்பிணிப் பெண்கள் கர்ப்பக் காலம் முழுவதற்கும் இரத்த அழுத்தத்தைப் பரிசோதனை செய்துகொள்ள வேண்டும்.

**உணவு முறைகள் :**

அதிக இரத்த அழுத்தத்தைக் குறைப்பதற்கு உணவில் பொட்டாசியம், மெக்னீசியம், கால்சியம் ஆகிய தனிமங்கள் அதிக அளவிலும், கொழுப்பு குறைவான அளவிலும் இருக்க வேண்டும். பொதுவாகப் பல்வேறு காய்கறிகளையும், பழங்களையும் உணவில் சேர்த்துக் கொண்டாலே இவை கிடைத்துவிடும். சோடியம் என்னும் தனிமத்தைத் தவிர்ப்பது நல்லது. சமையல் உப்பு, பேக்கரியில் உபயோகப்படுத்தப்படும் சோடா உப்பு, உணவில் சுவைக்காக பயன்படுத்தப்படும்

அஜினோமோட்டோவில் சோடியம் அதிகம் இருக்கும். எனவே இவற்றைத் தவிர்க்கவும், வடகம், ஊறுகாய், சாஸ், கெட்சப், உணவுகளையும் தவிர்ப்பது நல்லது. இவற்றில் உப்பு அதிகம் இருக்கும்.

**உடற்பயிற்சி:**

ஒரு வாரத்திற்கு குறைந்தபட்சம் 3 முறையாவது, 20 நிமிடங்கள் மிதமான ஓட்டம், வேக நடை, நீச்சல் போன்றவற்றில் ஈடுபட வேண்டும்.

**தியானப் பயிற்சி:**

தொடர் தியானப் பயிற்சிகளால் குறைந்த பட்சம் 10 முதல் 15 அளவு வரை இரத்த அழுத்தம் குறைவதாக ஆய்வுகள் தெரிவிக்கின்றன. தொடர் தியானப் பயிற்சிகள் மன அழுத்தத்தைக் குறைக்கின்றன. எனவே மன அழுத்தத்தால் ஏற்படும் அதிகப்படியான ரத்த அழுத்தம் நீங்குகிறது. தியானம் தளவு நிலையை அளிப்பதால் மன அழுத்தம் நீங்கும் வாய்ப்பு அதிகரிக்கிறது. யோகப் பயிற்சிகள் அனைத்துமே தானியங்கி நரம்பு மண்டலத்தைச் சமன் செய்வதால் இரத்த அழுத்தம் சீராக இருக்க உதவுகிறது.

யோகா, தியானம், மூச்சுப்பயிற்சி (பிராணாயாமம்), முத்திரை, ஆரோக்கியமான உணவு, மகிழ்வான சூழ்நிலை இவற்றைக் கடைப்பிடித்தால் நாம் ஆரோக்கியமாக வாழலாம்.

## புதுமனை புகுவிழா

கோவை திருமதி சரோஜா மாதவன் மகன் நாகராஜ், கோவை ஓனாம்பாளையம் கே.ஜி. மில் நிறுத்தம் அருகில் கட்டப்பட்ட வீட்டின் புதுமனை புகுவிழா 09.03.2025 காலை 5 மணியளவில் சீரும் சிறப்புமாக நடைபெற்றது. விழாவில் உற்றார் உறவினர்கள், நண்பர்கள், ஊர்ப் பொதுமக்கள், பெரியோர்கள் கலந்து கொண்டு ஆசி வழங்கி சிறப்பித்தார்கள். **தகவல் : A.S.முருகேசன், பொருளாளர், சென்னை**



# புகுந்த வீடும் பிறந்த வீடுதான்

– திராவிடமணி மேகநாதன் DHA, திருபுவனம்

அது ஒரு ரயில் பயணம் என் அருகில் வயதான பெண்மணி ஒருவர் வந்து அமர்ந்தார். எதரில் என் அம்மா வயதில் இரண்டு பெண்கள் அமர்ந்திருந்தனர். அவர்கள் பேச்சு குடும்பம் சார்ந்ததாக இருந்தது. அவர்களில் ஒருவர், “என் மகனுக்கு பெண் பார்த்துக்கிட்டிருக்கேன்... நல்ல பெண்ணா கிடைச்சா உடனே கல்யாணம் முடிச்சிடுவேன்..” என்றார். இன்னொருவர், “இப்ப வர்ற பொண்ணுங்க எங்க நம்ப பேச்சை கேக்குறாங்க..! அவங்க இஷ்டம் போலதான் இருக்கிறாங்க...! அவங்களை எந்தக் கேள்வியும் கேக்க முடியுறதுல்ல...! அப்படியே கேட்டாலும் படிச்சு வேலைக்குப் போறவங்க அப்படித்தான் இருப்பாங்கனு நம்ம பசங்களே சொல்றாங்க...” என்றார்.

இதைக் கேட்டு என் அருகில் இருந்த அம்மா, “என் மகனுக்கும் தான் கல்யாணம் முடிஞ்சி 2 வருஷம் முடிஞ்சிடிச்சு.. என் மருமகளை நான் எதுவும் கேட்கிறதில்ல... காரணம் என் மாமியார் நான் மருமகளா வந்தப்போ அதிகாலையில் சீக்கிரமா எழுந்திருக்கனும். வீட்டு வேலைய எல்லாம் செய்யனும்னு ஆர்டர் போட்டாங்க.. அப்படியே அவங்க சொன்ன எல்லா வேலைய செஞ்சாலும் ஏதாச்சும் குறை சொல்லிக்கிட்டே இருப்பாங்க..! அதனால் என் மாமியார் கிட்ட என்னால சகஜமா நெருங்கி பழக முடியல... நாம பட்ட கஷ்டத்த நம்ம குழந்தைகளுக்கு நாம கொடுக்கக் கூடாது. அதனால நான் என் மருமகள அந்த மாதிரி எல்லாம் நடத்த மாட்டேன்... அவள் அம்மா வீட்டுல இருக்கிற மாதிரியே இங்கேயும் சந்தோஷமாத்தான் இருக்கா... அவளும் நானும் பிரெண்ட்ஸ் மாதிரி பழகிட்டு இருக்கோம். யாருகிட்டயும் சொல்லாத விஷயங்கள கூட அவ என்கூட பகிர்ந்துக்குறா... நாம எப்பவுமே நம்ம குழந்தைகளை அவங்க இஷ்டத்துக்கு இருக்க விடனும்... அவங்களை நம்ம கட்டுப்பாட்டுக்குள்ள வைக்குறதா நினைச்சு குறை எதுவும் கண்டுபிடிக்காம இருந்தாலே போதும்” என்றார்.

இதைக் கேட்ட இருவரும், “நீங்க சொல்றதும் சரிதான்” என்றார்கள். **எல்லா பெண்களுக்கும் இப்படியொரு மாமியார் கிடைத்தால் புகுந்த வீடும் பிறந்த வீடுதான்.**

உ

ஸ்ரீ வயிரவ சுவாமி துணை

வாழ்த்துகளுடன்

கடை: 94432 06431
97867 46431

வீடு: 97874 81103

# சிவசக்தி ஸ்டோர்ஸ்



279, அண்ணாசாலை,

**பொன்னமராவதி.**

**மளிகை, ஆயில், ஸ்டேசனரி மற்றும் குளிர்பானங்கள் மொத்தம் & சில்லறை**

# அன்னம் டிரேடர்ஸ்



வடுகநாதன் ரோடு,
KVB பேங்க் அருகில்,
**பொன்னமராவதி.**



ஸ்டாக்கிஸ்ட்:
**நெஸ்டில், மைசூர் சோப், ராஜம் சுக்கு காபி, பண்ணாரி மைதா.**

# ராநா கெஸ்ட் ஹவுஸ்

KVB பேங்க் அருகில், **பொன்னமராவதி.**

முற்றிலும் குளிரூட்டப்பட்ட (A/C) ரூம்கள்,
சிறிய பெரிய அளவுகளில், நிறைந்த வசதிகளுடன்,
நிறைவான கட்டணத்தில்,
நகரின் மத்தியில் தரமான தங்கும் விடுதி.







உ

அருள்மிகு கருப்பையா சுவாமி துணை

அருள்மிகு அங்காள பரமேஸ்வரி அம்மன் துணை

**S.வேலங்குடி**

**அருவியூர் வடக்குவளவு**

**நகரத்தார்களின்**



# அருள்மிகு அங்காளபரமேஸ்வரி கோயில்



## அஷ்டபந்தன மஹா கும்பாபிஷேகம்



சிவகங்கை மாவட்டம், திருப்பத்தூர் வட்டம், வேலங்குடியில் **அருவியூர் வடக்குவளவு நகரத்தார்களுக்குச் சொந்தமான அருள்மிகு அங்காளபரமேஸ்வரி அம்மன் ஆலயம்**

1924 ஆம் ஆண்டு வாலஸ்தாபனம் செய்யப்பெற்று 1932 ஆம் ஆண்டு கர்ப்பகிரகம், அர்த்த மண்டபம், கோபுரமும் கட்டி முடிக்கப்பெற்று



முதல் கும்பாபிஷேகம் : 06-06-1952

2 வது கும்பாபிஷேகம்: 22-05-1986

3 வது கும்பாபிஷேகம்: 22-01-1999

4 வது கும்பாபிஷேகம்: 30-01-2012

ஆகிய நாட்களில் நடைபெற்றன.

நமது நகரத்தார் சமூகம் மேன்மேலும் வளர்ச்சி பெற குலதெய்வ வழிபாடு இன்றியமையாததாகும். இதனை கருத்தில் கொண்டு 5 வது குடமுழுக்கு செய்ய திருவருள் கூடி



21-04-2024 அன்று பாலஸ்தானம் செய்யப்பெற்று 23-05-2024 அன்று முகூர்த்தக்கால் ஊன்றி திருப்பணி வேலைகள் தொடங்கப்பெற்றது.

நமது நகரத்தார்களின் பெருமுயற்சியால் திருப்பணி வேலைகள் யாவும் நிறைவுபெற்று **அருள்மிகு விநாயகர், அருள்மிகு அங்காள பரமேஸ்வரி அம்மன், அருள்மிகு வீரபத்திரர்** மற்றும் பரிவார தெய்வங்களுக்கு **மஹா கும்பாபிஷேகமானது** நாளது குரோதி வருடம், தை மாதம் 18ம் தேதி 20ம் நாள் **02-02-2025** ஞாயிற்றுக்கிழமை அன்று நாட்டார் நகரத்தார்கள் ஊர்பொதுமக்கள் முன்னிலையில் சீரும் சிறப்புமாக நடைபெற்றது.




- தகவல் : PL. **ராமஜெயம்** பொன்னமராவதி

# திருமண விழா



மணமக்கள் :

திருநிறைச் செல்வன் **இ. முத்தழகன்** M.Com. C.A.
Senior Executive, Accsonrce, Chennai.

திருநிறைச்செல்வி **தி.ரா. பொன்னழகி (எ) பிரியதர்சினி** B.Sc.,PGDCA
SEO-Specialist-Com Technogies, Bangalore

பெற்றோர் : கமுகக்கூருடையார்
திரு தே.மு.கு. இன்பநாதன் செட்டியார் –
செல்வமீனாள் ஆச்சி, கிருங்காக்கோட்டை

பெற்றோர் : கல்வாசநாட்டு சுந்தரபாண்டியபுரத்து நன்னெறி
பூண்டிலூருடையார் திரு வி. திருவம்பலராஜா செட்டியார் –
ஜெயராணி ஆச்சி, தஞ்சாவூர்.

நிகழ்விடம் : நத்தம் – செந்துறை ரோடு, தேவதாஸ் – சிவகாமி மஹால்.



மணநாள் : 10.02.2025 திங்கட்கிழமை

**தகவல் : ச.பொ.சொ. இளங்கோவன் D.Pharm. செய்தித் தொடர்பாளர், தஞ்சாவூர்.**

---

# அறிவோம் அருமை

**– A. காவியா, பத்தாம் வகுப்பு, ஆனையூர், மதுரை.**

ஓடி வந்து மூச்சு வாங்கும்போது
தான் தெரியும் தண்ணீரின் அருமை...!
கடந்துவந்த பிறகுதான் தெரியும்
காலத்தின் அருமை...!
வாழ்த்தினாலும், தாழ்த்தினாலும்
சிரித்துக் கொண்டே இரு.
காலம் அவர்களுக்குப் பதில் சொல்லும்...!
கசப்பான நினைவுகள்
காலம் முழுவதும் கசப்பதில்லை...!
நிகழ்வுகள் மாறும் போது
நினைவுகளும் இனிக்கும்...!





உ
அருள்மிகு கருப்பையா சுவாமி துணை
அருள்மிகு அங்காள பரமேஸ்வரி அம்மன் துணை

**S.வேலங்குடி**

**அருள்மிகு அங்காளபரமேஸ்வரி கோயில்**

**அருவியூர் வடக்குவளவு நகரத்தார்கள்** நடத்தும்
24 ஆம் ஆண்டு **கூட்டு வழிபாடு அழைப்பிதழ்**

அன்புடையீர்!

நிகழும் மங்களகரமான விசுவாவசு ஆண்டு சித்திரைத்திங்கள் 28 ஆம் நாள் 11-5-2025 ஞாயிற்றுக்கிழமை காலை 7.00 மணிக்குத் தொடங்கி மாலை 4.00 மணி வரை சிறப்பாக நடைபெற இருக்கும் பொதுப்படையல் விழாவிற்கும், கூட்டு வழிபாட்டிற்கும், அன்னதான விழாவிற்கும் தாங்கள், சுற்றமும் நட்பும் சூழ வருகைதந்து சிறப்பிப்பதுடன், இறை அருளுக்கும் பாத்திரமாகும்படி அன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

இங்ஙனம்,
**S. வேலங்குடி கோயில் அருவியூர் வடக்குவளவு நகரத்தார்கள்**

# கணவனிடம் மனைவி எதிர்பார்ப்பது



☺ அன்பாக பிரியமாக இருக்க வேண்டும்
☺ மனது புண்படும்படி பேசக் கூடாது
☺ கோபப்படக்கூடாது
☺ சாப்பாட்டில் குறை சொல்லக் கூடாது
☺ பலர் முன் திட்டக்கூடாது
☺ எந்த இடத்திலும் மனைவியை விட்டுக்கொடுக்கக் கூடாது
☺ சொல்வதைப் பொறுமையாக கேட்க வேண்டும்
☺ மனைவியின் கருத்தை ஆதரிக்க வேண்டும்
☺ மனைவியை மதிக்க வேண்டும்; ஒளிவு மறைவு கூடாது
☺ முக்கியமானவற்றை மனைவியிடம் கூற வேண்டும்
☺ உடல் நலமில்லாத போது உடனிருந்து கவனிக்க வேண்டும்
☺ அம்மாவிடம் காட்டும் பாசத்தை மனைவியிடமும் காட்ட வேண்டும்
☺ எங்கு சென்றாலும் மனைவியிடம் தெரிவித்துச் செல்ல வேண்டும்
☺ சொன்ன நேரத்தில் வர வேண்டும்
☺ மனைவிக்குப் பிடித்தவற்றைத் தெரிந்து வைத்திருக்க வேண்டும்.

**– ஆசிரியர் குழு**

## முக்கிய அறிவிப்பு



இலவசமாகப் படிக்க வாய்ப்பு வழங்கும் இடங்கள் மற்றும் நீங்கள் படிக்க விரும்பும் படிப்பை பற்றியும் கல்லூரி பற்றியும் மேலும் விவரங்களை தெரிந்து கொள்ள நீங்கள் அணுக வேண்டிய எண் : **7530042175**

தேசிய நல்லாசிரியர் திரு **நா திருநாவுக்கரசு**
கல்வி வளர்ச்சிக் கழக அமைப்பாளர் & முன்னாள் தலைவர்
பொன்னமராவதி

**I shall be very happy to assist any students / parents planning to get admission in Agriculture and allied disciplines (horticulture, Forestry, Fisheries, etc).**

**Dr. A.S. Mailappa**
Contact No : 70050 88216





# சிறந்த ஆய்வாளர் விருது பெற்ற நம்மவர்



கோவை அன்னூர் திரு S. ராஜா செட்டியார் - அபிராமி ஆச்சி இவர்களின் மகன், கோவை PSG காலேஜ் ஆப் பார்மசியில் B.Pharm. படித்து வரும் செல்வன் R. விஷ்ணு, சென்னை தமிழ்நாடு டாக்டர் எம்.ஜி.ஆர். மருத்துவ பல்கலைக்கழகம் “மருத்துவத்தில் செயற்கை நுண்ணறிவு” என்ற தலைப்பில் 2024 ஆம் ஆண்டில் நடைபெற்ற நிகழ்வில் இளநிலை பிரிவில் சிறந்த ஆய்வாளர் என்ற விருதை தமிழக அரசு மக்கள் நல்வாழ்வுத்துறை அமைச்சர் மாண்புமிகு திரு மா. சுப்பிரமணியன் அவர்களிடமிருந்து பெற்றுள்ளார்.



இந்த விருது “AI in IV Infusion Therapy” என்ற மருத்துவ கருவியின் புரோட்டோ டைப் உருவாக்கத்தில் இவரது ஆர்வமுள்ள பங்களிப்பை அங்கீகரிக்கிறது. மேலும் இவர் கல்லூரி பேராசிரியர்களின் வழிகாட்டுதலின் கீழ் மூலிகை ஆலை மூலங்களிலிருந்து புதுமையான மலேரியா எதிர்ப்பு மருந்துகளுக்கான மூலக்கூறு ஆய்வில் அவர் செய்த முக்கியமான பங்களிப்பிற்கும் சேர்த்து இந்த விருது வழங்கப்பட்டுள்ளது.

சிறந்த ஆய்வாளர் விருதுபெற்ற செல்வன் R. விஷ்ணுவின் இந்த சாதனையை கல்வி வளர்ச்சிக் கழகம் பாராட்டி வாழ்த்துகிறது.

## பொன்மொழி

மகிழ்ச்சியான வாழ்க்கைக்கு இரண்டே வழிகள்தான்
ஒன்று சூழ்நிலையை மாற்றுங்கள்; இல்லையென்றால்
சூழ்நிலைக்கேற்ப நீங்கள் மாறிவிடுங்கள்!

ESTD : 1991

உ

ஸ்ரீ மங்கைநாயகர் தேனம்மை சுவாமிகள் துணை

நம் நகர பெருமக்களுக்கு நல்வாழ்த்துக்கள்

Off : 0461 - 2328501
Res : 0461 - 2328502
91711 70000




# ஸ்ரீ அலங்கார் ரெக்சின் சென்டர்

**Dealers in :**

**Rexine, Furniture and Furnishing Materials**

**ஒரு வருட உத்திரவாதத்துடன் தேக்கு மரக்கட்டில் - டபுள் மற்றும் மெத்தை ரூ. 15,100/- மட்டும், (தமிழகம் முழுவதும் டெலிவரி செய்யப்படும்).**

247-C/4, Palayamkottai Road, Near Old Bus-Stand, Tuticorin-628 002.
E-mail : alankarexine@gmail.com www.tuticorinalankarrexine.com




# ஸ்ரீ அலங்கார் பில்டர்ஸ்

Structural Engineer ❖ Licensed Surveyor in Tuticorin City Municipal Corporation
❖ Panel Valuer in Tuticorin District Central Co.op. Bank Ltd.,

**கட்டிட வரைபடம், வடிவமைப்பு, முகப்புதோற்றம், கட்டிட மதிப்பீடு, வரைபட அனுமதி சான்று, வாஸ்து முறைப்படி கட்டிடங்கள் சிறந்த முறையில் செய்து தரப்படும்.**

71-5, Balavinayagar Kovil Street, Upstairs Sri Alankar Rexine Centre,
Tuticorin- 628 002.
Email : tutyalankarbuilders@gmail.com www.tuticorinalankarrexine.com

நம் சமூக பணியில்....

**அரு. சோம சண்முகநாதன்**

**S. சிவகாமி**

**S. சசிகுமார்** B.A.,DECM.,

**Er. S. பிரஹலாதன்** M.E.,

**பூதமங்கலமூருடையார், உலகம்பட்டி.**

# நம் சமூக இளந்தளிர்களின் ஓவியங்கள்



**N. விஷாந்த்ராம்,**
2 ஆம் வகுப்பு
பெற்றோர் :
திரு R.S. நடராஜ் – வெண்ணிலா
செல் : 98652 93534





**க. தருண், 5 ஆம் வகுப்பு**
**மதுரை.**

# பெயர் சூட்டும் விழா

குளத்துப்பட்டியை பூர்வீகமாகக் கொண்டு பேராவூரணியில் வசிக்கும் பணப்பாக்கூருடையார் தெய்வத்திரு அ. சுந்தரமூர்த்தி செட்டியார் – நலமுடன் சு. சிவயோகம் ஆச்சி இவர்களின் மகன் வழிப்பேரனும், திருச்சி – சொக்கம்பட்டி திரு செந்தில்குமார் செட்டியார் – சந்தோசம் ஆச்சி இவர்களின் மகள் வழிப் பேரனும், திரு கணேசன் – சினேகா இவர்களின் புதல்வனுக்கு பேராவூரணி இவர்களின் இல்லத்தில் 09.03.2025 அன்று **சிவசுந்தரம்** என்ற திருப்பெயர் பெரியோர்களின் முன்னிலையில் சூட்டப்பட்டது.



# கடமையை செய்

ஒரு காட்டில் மான் ஒன்று வாழ்ந்து வந்தது. அது ஒரு நிறைமாத கர்ப்பிணியாய், குட்டியை ஈனும் தருவாயில் இருந்தது. இந்த சமயத்தில் வேடன் ஒருவன் வேட்டையாட காட்டிற்கு வந்தான். அவன் கண்ணில் மான் படவே மானை துரத்திக் கொண்டு சென்றான். அவனிடம் இருந்து தப்பியோடிக் கொண்டிருந்த போதே மறுபுறம் மான் புலியைக் கண்டது. இருவரிடமும் இருந்து மறைந்து ஒரு புதருக்குள் சென்ற போது, காட்டுத்தீ தூரத்தில் பரவிக் கொண்டிருந்தது. அதேசமயத்தில் பலத்த இடிச்சத்தத்துடன் சூறாவளியும் வீசி மானை இன்னும் அச்சமுறச் செய்தது. தன்னைச் சுற்றி நாலாபுறமும் இன்னல்கள் ஆழக் கண்ட மான் மிகவும் அழுது கடவுளிடம் பிரார்த்தனை செய்தது. கடவுளே! நான் ஒரு கர்ப்பவதி. ஆனால் எனக்கு எல்லாப் பக்கத்திலும் துன்பங்களே இருக்கின்றன. என்னை எப்படியாவது காப்பாற்று. இப்பொழுது மானின் மனதிற்குள் ஏதோ ஒரு சத்தம் கேட்டது. அது மானே நீ உன்னுடைய கடமையை மட்டும் செய் என்று சொன்னது. மானும் அதைப் போலவே தன்னுடைய மான்குட்டியை பாதுகாப்பாக பெற்றெடுத்தது.

வேடனுடைய மனம் இதைப் பார்த்ததும், அடடா ஒரு கர்ப்பமாக இருந்த மானை நான் வேட்டையாட பார்த்தேனா என்று அவனுடைய மனம் இளகியது. அதேசமயம் புலியும் மானைக் கொல்லாமல் காப்பாற்ற நினைத்து அவன் தன் அம்பினால் புலியைக் கொன்றான். இன்னொருபுறம் கருமேகங்கள் சூழ்ந்து கனத்த மழை பெய்தது. அந்த மழையால் காட்டுத்தீப் பரவல் அணைந்தது. மானிற்கு வந்த அனைத்து துன்பங்களும் அந்த நொடியே மறைந்தது. மான் கடவுளுக்கு நன்றி கூறிவிட்டு, தன் குட்டியுடன் மகிழ்ச்சியாக வாழ ஆரம்பித்தது.

**நீதி : எந்த இன்னல்களையும் கண்டு சோர்வடைந்து விடக் கூடாது. நம்முடைய கடமைகளை நாம் சரியாக செய்தால் கடவுளும் இயற்கையும் நமக்கு துணைபுரிவார்கள்.**

**து. ஆதித்யா,** 9ஆம் வகுப்பு,
பெற்றோர் : சிவ. துரை அரசு – து. பொன் சுகந்தி
விவேகானந்தா வித்யாலயா, திருச்சி.



# புதிய கல்விக்காவலர்கள்

## கல்விக்காவலர் - 53



ஆமலூருடையார்
**திரு. மா. முருகானந்தம் - இந்திரா தேவி ஆச்சி,** சென்னை

### கல்விக்காவலர் குடும்பத்தினர்

**பெற்றோர் :** தெய்வத்திரு. மாணிக்கம் செட்டியார் – நலமுடன் திருமதி. சிவஜோதி ஆச்சி

**மாமனார் மாமியார் :**
திரு. T. நடராஜன் செட்டியார் – திருமதி இரத்தினம் ஆச்சி

**மகன்கள் – மருமகள்கள்**

1. M. அருண் கணேசன் B.Tech – யோகலெட்சுமி B.Tech
   A. ஸ்ரீகாந்த், A. ஸ்ரீ சரண்
2. M. கௌரி சங்கர் B.Tech – ஸ்ரீதேவி M.Sc., IIM MBA
   G. வெற்றிமாறன்
3. M. செல்வகுமார் B.E., – சிம்லா M.Sc.,

## கல்விக்காவலர் - 54



**நாவலூருடையார்**
**ச. மீனாட்சி ஆச்சி**

### கல்விக்காவலர் குடும்பத்தினர்

**பெற்றோர் :** தெய்வத்திருவாளர்கள்.
வே. சண்முகநாதன்செட்டியார் –
குஞ்சரத்தம்மை ஆச்சி

**தம்பி, தம்பி மகள் – மருமகன், மகன்கள் – மருமகள்கள்**

ச. சதாசிவம் செட்டியார் – ஜெயமணி ஆச்சி
மகள்:
செல்வ மீனாட்சி (எ) பொன்மலர் B.Sc.,– ரவி B.Com.,
மகன்கள்:
ச. செண்முகவேல் M.B.A.,– ச. மீனாட்சி B.B.M.,
ச. வைரவபாண்டி M.B.A.,– வை. சத்தியா B.Sc.,

## கல்விக்காவலர் - 55



**வரதலூருடையார்**
**திரு. ந. ஜெகநாதர் - கண்மணி ஆச்சி**
புழுதிபட்டி – திண்டுக்கல்

### கல்விக்காவலர் குடும்பத்தினர்

**பெற்றோர் :** திரு. ந.மு.ம. நல்ல சின்னான் செட்டியார்
திருமதி. ந. தங்கமயில் ஆச்சி

**மாமனார் – மாமியார் :**
திரு. சு. மாணிக்கம் செட்டியார் &
திருமதி. மா. சந்தான லட்சுமி ஆச்சி.

மகன் – மருமகள் :
J.K. ஸ்ரீநிவாஸ் B.Tech.– பிரியங்கா B.Tech.

மகள் – மருமகன் :
J.K. நர்த்தனா B.Tech. M.E., Ph.D. – R. சரவணன் B.E., MBA

பேரன் : S. பிரணவ்

## கல்விக்காவலர் - 56



கமுகக்கூருடையார்
**தே.மு.கு.மு. முத்தழகன் செட்டியார், மு. சுப்பம்மாள் என்ற சக்கரை ஆச்சி.**
கிருங்காக்கோட்டை

### கல்விக்காவலர் குடும்பத்தினர்

மகன் : திரு. தே.மு. கணேசன் செட்டியார் B.E.,M.Sc., Engg.
திருமதி யோகம் ஆச்சி

பேரன் : G. பத்மநாபன் B.E., (Hons) M.Sc., (Hons) PGDM –
உமா பகவதி M.Sc., (Chem) CAIIB.,

கொள்ளுப் பேரன்–பேத்தி :
செல்வி நந்திதா பத்மநாபன் BS., (Business Analytical & Info Tech)
சித்தார்த்தன் BS., (Computer Science)

பேத்தி : க. கற்பகம் B.Sc., (Chem) B.Ed.,

கொள்ளுப் பேத்தி : ந. ஜனனி



## கம்பஇராமாயண வினாடி வினா போட்டியில் வெற்றிவாகை சூடிய நம்மவரின் மகள்




கும்பகோணத்தில் வசித்துவரும் திரு SV. ராஜ் செட்டியார் – திருமதி ராஜலட்சுமி ஆச்சி தம்பதியரின் மகள் செல்வி R. சஞ்சனா, 30 பள்ளிகள் பங்குபெற்ற, Ministry of Tourism கும்பகோணத்தில் நடத்திய கம்பஇராமாயண வினாடி வினா நிகழ்ச்சியில் முதல் சுற்று மற்றும் 05.04.2025 அன்று கம்பர் பிறந்த தேரழுந்தூரில் நடைபெற்ற இறுதி சுற்றிலும் கலந்து கொண்டு இரண்டாவது பரிசை வென்றுள்ளார்.

தகவல் : திரு SV. ராஜ், கும்பகோணம்

செல்வி R. சஞ்சனாவின் இந்த சாதனையை கல்வி வளர்ச்சிக் கழகம் பாராட்டி வாழ்த்துகிறது.

# 2023-24ஆம் ஆண்டில் பெருந்தொகை வழங்கிய நன்கொடையாளர்கள்

**மாபெருங்கொடை வள்ளல்கள் :**

1. திரு. **A.P. ஸேதுராமன் - விஜயலட்சுமி,** கோவை.
2. திரு. செல்வன் **R.M. செந்தில்,** பொன்.புதுப்பட்டி.
3. திரு. **சொ. இராமநாதன் - சிவசக்தி,** (செம்பதி) துபாய்.

**பெருங்கொடை வள்ளல்கள் :**

1. திரு. **சொ. வைத்திலிங்கம் செட்டியார் - பாப்பா ஆச்சி,** மதுரை.
2. தெய்வத்திரு. STKR. **சக்திவேல்** நினைவாக **S. ராஜலெட்சுமி,** பொன்னமராவதி.

**கொடை வள்ளல்கள் :**

1. திருமதி. **இராம. லதா** அவர்கள், நத்தம்
2. திரு. **து. அரவிந்த் குமார்** B.E., M.S., **- பத்மா,** B.E., சென்னை.
3. **திரு. ம.சி.கு.கு. கணேசன் செட்டியார் - தென்னரசி ஆச்சி,** கோவை.

**வள்ளல்கள் :**

1. திரு. **M. பாலகிருஷ்ணன் - பானுமதி ஆச்சி,** சிங்கம்புணரி.
2. திரு. **செ. ஆசை அலங்காரம்** குடும்பத்தார், சிறுகுடி.
3. திரு. **M.S. முருகப்பன்,** பொன்னமராவதி.
4. திரு. **சொ. முருகேசன் - கவிதா,** சிவகாசி.
5. திரு. **A. முருகன் - செல்வமணி,** நீடாமங்கலம்.
6. திரு. **T.M.R.S. சிவக்குமார் - அருணோதயம்,** கோவை.

**6-12 மாணவர்களுக்கு உதவித்தொகை வழங்கும் நன்கொடையாளர்கள்**

1. சிங்கம்புணரி **மீனாட்சி நல்லதம்பி,** வலச்சேரிப்பட்டி **தெய்வானை வள்ளியப்பன்** நினைவாக **அவந பொதுநலச் சங்கம்,** பிரான்மலை.
2. தெய்வத்திரு. **மு.அ. பரமசிவம் செட்டியார் - அங்கம்மாள் ஆச்சி** குடும்பத்தார், பொன்.புதுப்பட்டி.
3. திரு. **சொ. வைத்திலிங்கம் செட்டியார்-பாப்பா ஆச்சி** குடும்பத்தார், மதுரை
4. திரு. **தே.மா. பழனிச்சாமி செட்டியார் - பழ. சரஸ்வதி ஆச்சி** குடும்பத்தார், பொன்.புதுப்பட்டி.
5. தெய்வத்திரு. **தீ.பழ. பொன்னுச்சாமி செட்டியார் - அன்னமயிலி ஆச்சி,** நினைவாக **A.P. ஸேதுராமன் - விஜயலட்சுமி,** கோவை.

**தங்கப்பதக்கம் வழங்கும் நன்கொடையாளர்கள்**

1. திரு. **அரு.சோம. சண்முகநாதன் - சிவகாமி,** தூத்துக்குடி.
2. **அருவியூர் வடக்குவளவு நகரத்தார் சங்கம்,** பொன்னமராவதி
3. **அருவியூர் வடக்குவளவு நகரத்தார், கல்வி வளர்ச்சிக் கழகம்,** பிரான்மலை.
4. **அருவியூர் வடக்குவளவு நகரத்தார் சங்கம், கோயம்புத்தூர்.**

# SPECIAL HERO

- Christina M Kerschen



When I was a baby
you would hod me in your arms
I felt the love and tenderness
keeping me safe from harm
I would look up into your eyes
and all the love I would see
How did I get so lucky!
You were the dad chosen for me
There is something special
about a father's love
Seems it was send to me
from someplace up above
Our love is everlasting?
I just wanted you to know
That you're my special hero
and I wanted to tell you so

**- K. Kavia, Pudukkottai**

## கல்விக் காவலர்கள்

1. **மே 2004 : முதல் கல்விக் காவலர், ஆமலூருடையார், தெய்வத்திரு. வெ.ராம. சுப்பிரமணியன் செட்டியார் - அன்னபூரணி ஆச்சி அவர்கள், அம்மன் குறிச்சி, சென்னை.**
2. ஜுலை 2004 : மேலூருடையார், **திரு. தே.மா. பழனிச்சாமி செட்டியார் - திருமதி. சரஸ்வதி ஆச்சி** அவர்கள், பொன்னமராவதி.
3. செப்டம்பர் 2006 : கழனிவாசலூருடையார் **திரு.நா. சுப்பிரமணியன்** BSc., CAIIB **திருமதி. தமிழ்ச்செல்வி** B.Lit., அவர்கள், கல்லம்பட்டி, சென்னை.
4. **மார்ச் 2007 : நாவலூருடையார், திரு. ச. கனகசபை B.E., மனோரஞ்சிதம்** அவர்கள், உலகம்பட்டி, திருச்சி.
5. ஜுலை 2007 : கழுகக்கூருடையார், **தெய்வத்திரு. இராம. வேலாயுதம் செட்டியார் - பார்வதி ஆச்சி** அவர்கள், படமிஞ்சி, சென்னை.
6. நவம்பர் 2007 : கழனிவாசலூருடையார், **தெய்வத்திரு. மு.சி.கி. நாராயணன் செட்டியார் - இராஜமாணிக்கம் ஆச்சி** அவர்கள்,கல்லம்பட்டி.
7. மே 2010 : சிக்கலூருடையார், **தெய்வத்திரு. நல்லாசிரியர் மெ. இளங்கோ - சாவித்திரி** அவர்கள். வா.புதூர்.
8. ஜுலை 2011 : அரும்பாக்கிளையார். திரு. **M.M. தியாகராஜன் B.Sc., தெய்வத் திருமதி. ஜோதிமணி** அவர்கள் புழுதிப்பட்டி. மதுரை.
9. ஜனவரி 2012 : பொன்னமராவதி பூண்டிலூருடையார். தெய்வத்திரு. மா. தங்கராஜன் - அழகுமீனாள் அவர்கள், புழுதிபட்டி பெங்களூரு.
10. மார்ச் 2012 : கழுகக்கூருடையார். **தெய்வத்திரு. மு.ஆ. இராமசாமி செட்டியார். தெய்வத்திருமதி. இராஜாமணி ஆச்சி,** சொக்கம்பட்டி.
11. மே 2012 : நாவலூருடையார், **திரு. ச. சொக்கலிங்கம் செட்டியார் - தெய்வத்திருமதி. தனபாக்கியம் ஆச்சி** அவர்கள் உலகம்பட்டி.
12. **ஜுலை 2012 : கழனிவாசலூருடையார். திரு. P.L. இராமஜெயம், பத்மாவதி அவர்கள், பொன்னமராவதி.**
13. செப்படம்பர் 2012 : கழுகக்கூருடையார். **தெய்வத்திரு.** M.S.M. **மாணிக்கம் செட்டியார் - சரஸ்வதி ஆச்சி** அவர்கள், பொன்னமராவதி.
14. **நவம்பர் 2012 : பணப்பாக்குழுருடையார். தெய்வத்திரு. கு. சொக்கலிங்கம் செட்டியார் - சொ. தேனம்மாள் ஆச்சி, செம்பூதி.**
15. மார்ச் 2013 - அரும்பாக்கிளையார், **தெய்வத்திரு. இராம. கதிரேசன் செட்டியார். திருமதி.முத்துலெட்சுமி ஆச்சி,** புழுதிப்பட்டி.
16. **மே 2013 : மேலூருடையார். தெய்வத்திரு. தே.மா. நாராயணன் செட்டியார் - சண்முகவள்ளி ஆச்சி,** பொன்னமராவதி.
17. ஜுலை 2013 : பூதமங்கலமூருடையார். **திரு. ச. இராமலிங்கம் - இராஜமாணிக்கம்,** அயனாவரம். சென்னை.
18. நவம்பர் 2013 : ஆமலூருடையார். **திரு. வெ.இராம.சுப. துரைராசு செட்டியார் - மீனாட்சி ஆச்சி,** அம்மன்குறிச்சி, சென்னை

19. ஜனவரி 2014 : நாவலூருடையார். **தெய்வத்திரு. அரு. வேலாயுதம் செட்டியார் – சம்பூர்ணம் ஆச்சி,** பொய்யாமணிப்பட்டி.

**20. மார்ச் 2014 : பூதமங்கலமூருடையார். திரு. R. பரமசிவம் B.E., தெய்வத்திருமதி. சிவகாம சுந்தரி, பொன்னமராவதி, சென்னை.**

**21. ஜனவரி 2015 : பூதமங்கலமுருடையார். திரு. அ.சொ. சண்முகம் செட்டியார் – ஜெயபாரதி ஆச்சி, அம்மன்குறிச்சி, திருச்சி.**

**22. மார்ச் 2015 : அரும்பாக்கிளையார். திரு. A.P. ஜெயபால் – புவனேஸ்வரி, பொன்னமராவதி, ஈராடு.**

23. ஏப்ரல் 2015 : கழுகக்கூருடையார், **தெய்வத்திரு. ம.வெ. நாராயணன் செட்டியார் – மீனாட்சி ஆச்சி** உலகம்பட்டி.

24. ஏப்ரல் 2015 : நாவலூருடையார். **திரு. சித. நடராஜன் செட்டியார், தெய்வத்திருமதி. இராஜம்மாள் ஆச்சி,** பொய்யாமணிப்பட்டி.

25. மே 2015 : நாவலூருடையார். **திரு. அரு.வே. மாணிக்கவேலு – சரஸ்வதி,** பொன்னமராவதி.

**26. ஜூலை 2015 : ஆமலூருடையார். திரு. வெ.இராம.சுப. செல்வம்** B.Sc., ACA., **– ஆனந்தம் ஆச்சி, அம்மன்குறிச்சி, சென்னை.**

27. ஜனவரி 2016 : அரும்பாக்கிளையார், தெய்வத்திரு. **மங்கைபாகன் செட்டியார் – சிகப்பி ஆச்சி,** புழுதிப்பட்டி.

28. மே 2016 : கழுகக்கூருடையார், **திரு. சி.சொ.மு. இராமையா செட்டியார் – தெய்வத்திருமதி. ஜெகநாதம் ஆச்சி,** கொன்னைப்பட்டி, தேனி.

29. செப்டம்பர் 2017 : ஆமலூருடையார். **திரு. வெ.இராம.சுப. நேசமணி செட்டியார் – அருள்நிதி புவனேஸ்வரி ஆச்சி,** அம்மன்குறிச்சி, சென்னை.

30. ஜனவரி 2018 : பணப்பாக்கூருடையார் **தெய்வத்திரு. சுப. மணிவாசகம் செட்டியார் – தேன்மொழி ஆச்சி,** காரைக்குடி.

31. செப்டம்பர் 2018 : கழுகக்கூருடையார் **திரு. சோம. கதிரேசன் செட்டியார் – தவமணி ஆச்சி,** பொன்னமராவதி, தொட்டாம்பாளையம்.

32. ஜூலை 2019 : அரும்பாக்கிளையார் **திரு. பொன். சிவஞானம் செட்டியார் – ராஜகுமாரி ஆச்சி,** சிறுகுடி.

**33. ஆகஸ்ட் 2019 : நாவலூருடையார் தெய்வத்திரு. சித. மாணிக்கம் செட்டியார் – அழகுமீனாள் ஆச்சி, பொய்யாமணிப்பட்டி.**

**34. ஆகஸ்ட் 2019 : வரதலூருடையார் ந. செல்வம் செட்டியார் – சிவயோகம் ஆச்சி, புழுதிபட்டி / கோவை.**

**35. ஜனவரி 2020 : பழனி ஆதிசைவ அன்னதான மடம் – அருள்மிகு பழனி ஆண்டவர் அறக்கட்டளை, பழனி.**

36. மார்ச் 2020 : மேலுருடையார் **தெய்வத்திரு. செ.பெ.அ. அலங்காரம் செட்டியார் – திருமதி. செம்பாயி ஆச்சி,** சிறுகுடி.

37. அக்டோபர் 2020 : பொன்னமராவதி **பூண்டிலூருடையார்**
**திரு. சி. வெள்ளைச்சாமி செட்டியார் - திருமதி. சாந்தி ஆச்சி, சிறுகுடி / கோவை.**

38. டிசம்பர் 2020 : கழனிவாசலூருடையார் கிருங்காக்கோட்டை
திரு. V. லட்சுமணன் செட்டியார் - பாக்கியலட்சுமி ஆச்சி தம்பதியர்

39. மே 2021 : மேலூருடையார் செம்பூதி/பொன்னமராவதி தெய்வத்திருவாளர்கள்
தே.மா. சுப்பையா செட்டியார்- சுப. பூங்கோதை ஆச்சி

40. டிசம்பர் 2021 : **பாளையூர் அம்பலம்கொண்டார் ஒடுவன்பட்டி / தஞ்சை திரு S. மாணிக்கம் செட்டியார் – திருமதி சுசீலா ஆச்சி**
41. பிப்ரவரி 2022 : **கழுகக்கூருடையார் கிருங்காக்கோட்டை/கோவை தெய்வத் திருவாளர்கள் தேனப்பன் செட்டியார் – சந்திரா ஆச்சி**
42. ஆகஸ்ட் 2022 : **அரும்பாக்கிளையார் – சிறுகுடி தெய்வத்திரு. ம.பொ. மாணிக்கம் செட்டியார் – தெய்வத்திருமதி. ம.பொ.மா. வேலுமயிலி ஆச்சி.**
43. ஜனவரி 2023 : உளுந்தூருடையார் **தெய்வத்திருவாளர் அரு. கிருஷ்ணன் செட்டியார் – நலமுடன் திருமதி சாவித்திரி ஆச்சி,** அ. காளாப்பூர்**.**
44. மே 2023 ஆமலூருடையார் **தெய்வத்திருவாளர்கள் சி. அண்ணாமலை செட்டியார் – பரஞ்சோதி ஆச்சி,** அம்மன்குறிச்சி.
45. மே 2023 நாவலூருடையார், **தெய்வத்திருவாளர்கள் வே. சண்முகநாதன் செட்டியார் – குஞ்சரத்தம்மை ஆச்சி,** உலகம்பட்டி.
46. ஜுலை 2023 கழனிவாசலூருடையார் குளத்துப்பட்டி தெய்வத் திருவாளர்கள் **அரு. அறிவுச்செல்வன் செட்டியார் – பாக்கியம் ஆச்சி & மூத்த மகள் சுப. பரிமளம் ஆச்சி.**
47. நவம்பர் 2023 மேலூருடையார் **அ.கு. நடராஜன் – தெய்வத்திருமதி ந. மீனாம்பாள் ஆச்சி,** சொக்கம்பட்டி.
48. நவம்பர் 2023 மேலூருடையார் **தெய்வத்திரு க.அ. அலங்காரம் செட்டியார்** சிறுகுடி.
49. ஜனவரி 2024 மேலூருடையார் **Rm.A. கண்ணன் செட்டியார் – க. அன்பு பிரியாள் ஆச்சி,** சிறுகுடி/கோவை
50. செப்டம்பர் 2023 – கல்வாசநாட்டு சுந்தர பாண்டியபுரத்து நன்னெறி பூண்டிலுருடையார் (சொக்கம்பட்டி) சென்னை திரு **A.S. முருகேசன் செட்டியார் – மு. கலைச்செல்வி ஆச்சி.**
51. வரதலூருடையார் **R. ராமச்சந்திரன் செட்டியார் – ரா. மணிமேகலை ஆச்சி,** கிருங்காக்கோட்டை / கோவை
52. மேலூருடையார் தெய்வத்திருவாளர்கள் **செ. செம்பன் செட்டியார் – பொன்னம்மாள் ஆச்சி,** சிறுகுடி.
53. ஆமலூருடையார் **திரு. மா. முருகானந்தம் – இந்திரா தேவி ஆச்சி,** அம்மன்குறிச்சி – சென்னை
54. நாவலூருடையார் **திருமதி. மீனாட்சி ஆச்சி,** உலகம்பட்டி – கோவை.
55. வரதலூருடையார் **திரு. ந. ஜெகநாதர் – திருமதி. மா. கண்மணி,** புழுதிபட்டி – திண்டுக்கல்.
56. கமுகக்கூருடையார் திரு. **தே.மு. கணேசன் செட்டியார் – திருமதி. க. யோகம்,** கிருங்காக்கோட்டை, சென்னை.

**அச்சிட்டோர் : சூர்யா பிரிண்ட் சொலூசன்ஸ்**

534 -ஏ, காமராஜர் சாலை, சிவகாசி - 626123.

போன்:04562-223315 இ.மெயில் suryaprint1998@gmail.com



# வாசகர் குரல்

**– N. சேதுராமன் செட்டியார், சேலம் செல்:9940868325**

நமது மதிப்பிற்குரிய கல்வி வளர்ச்சிக் கழகத் தலைவர் அவர்களின் தேர்வு எழுதவிருக்கும் மாணவர்களுக்கு வாழ்த்துக்கள் தலையங்கம் தொடக்கத்துடன் 2025 மார்ச் மாதக் குரல் வாசகர்களுக்கு படைக்கப்பட்டுள்ளது. கல்வி வளர்ச்சிக் கழகத்தின் வளர்ச்சிக்காக 56வது கல்விக்காவலராக இணைந்துள்ள வரலாற்று சிறப்புமிகு கல்வி அரசகர் கிருங்காக்கோட்டையை பூர்வீகமாகக் கொண்ட நமது ஐயா திரு தே.மு. கணேசன் செட்டியார் – திருமதி யோகம் ஆச்சி குடும்பத்தினருக்கும், கல்வித் தந்தை – கல்வித் தாய் என இணைந்துள்ள திரு TMR. சண்முகம் செட்டியார்–சௌந்தரம் ஆச்சி குடும்பத்தினருக்கும் வாசகர்களின் சார்பாக வாழ்த்துக்களையும், பாராட்டுக்களையும் தெரிவிக்கின்றோம். கல்வி வளர்ச்சிக் கழகத்தின் முன்னேற்றத்திற்காக மேலும் பல கல்விக்காவலர்கள் இணைந்திட வாழ்த்தி வரவேற்கின்றோம்.

கல்விக்காவலர் திரு தே.மு. கணேசன் செட்டியார்–யோகம் ஆச்சி சதாபிஷேக வண்ணப்படங்கள் மற்றும் குடும்ப உறுப்பினர்களை அறிந்து கொள்வதற்கு ஏதுவாக நன்றாக இருந்தது. நம் நகரத்தார் குரல் புத்தகம் மூலமாக நம் சமூகத்தில் உயர்பதவியில் இருந்தவர்கள் பற்றியும், தற்சமயம் இருப்பவர்களைப் பற்றியும் நமது மாணவ – மாணவிகள் தெரிந்து கொள்ள முடிகிறது. மேலும் இம்மாத குரல் இதழில் தமிழ்நாடு கண்ணகி குல செட்டியார்கள் பேரவையின் தொகுப்பு நிகழ்வு சமூக நிர்வாகி திரு TN. சுரேஷ்ராம் அவர்களின் விளக்க உரை இடம்பெற்று வெளியிடப்பட்டு இருந்தது. இவர்களின் செயல்பாடுகள் சமூக முன்னேற்றத்திற்கு உயர்வாக தெரிகின்றது. இவர்களின் மூதாதையர்களும், முன்னோர்களும் நம் இன வழியில் வந்தவர்களாகத்தான் தெரிகின்றது. இதனால்

இவர்களுடன் நாம் இணக்கமான தொடர்பு, பேச்சுவார்த்தை வைத்துக்கொள்ளலாம் போலத் தெரிகிறது. இவர்களும் நம்மை அழைக்கிறார்கள். நீண்ட இடைவெளிக்குப்பிறகு நமது திருவையாறு திருமுறை சைவப் புலவர் திரு VN. சுந்தரம் அவர்களின் ஆன்மீக தொடர் விளக்க உரை கட்டுரை இம்மாத இதழில் வெளிவந்துள்ளது. திருநீறு, விபூதியின் ஆன்மீக தெய்வீக சக்தியைப் பற்றி விவரித்து எழுதி இருந்தார். அனைவருக்கும் பயன் உள்ளதாக இருந்தது. தொடர்ந்து குரல் இதழில் சைவப்புலவர் அவர்களின் இறை அருள், ஆன்மீக கட்டுரைகளை எதிர்பார்க்கின்றோம்.

ஆசிரியர் குழுவின் ''கணவன்மார்களே! குடும்பத்தலைவியை நேசியுங்கள்" என்ற கருத்து குடும்பத்தை நேசிக்காதவர்களுக்கு நல்லதொரு ஆலோசனை. "கவலை என்பது ஒரு சுமை இல்லை" என்ற கட்டுரை வாசகர்களுக்கு பயனுள்ளதாக இருந்தது. கல்வி வளர்ச்சிக் கழகத்தின் துணைத்தலைவர் ஸ்ரீரஞ்சனி மகாபிரபு அவர்கள் நமது சமூகமும், கல்வி வளர்ச்சிக் கழகமும் இணைந்து டிசம்பர் மாதம் 1 ஆம் தேதி அன்று சிறப்புமிகு மாரத்தான் போட்டியை நடத்தியது. இந்நிகழ்ச்சியை தொகுத்து வழங்கிய கட்டுரை வாசகர்களுக்கு மகிழ்ச்சியாக இருந்தது. தொகுத்து வழங்கிய விதம் மாரத்தான் போட்டியை நேரில் பார்த்தது போல் இருந்தது. திருமதி ஸ்ரீ ரஞ்சனி அவர்களுக்கு வாழ்த்துகளை தெரிவித்துக் கொள்கிறோம்.

கோயமுத்தூர் அவினாசிலிங்கம் பல்கலைக்கழகத்தில் M.Sc.,Applied Psychologyஇல் முதல் மதிப்பெண் பெற்று பல்கலைக்கழக பட்டமளிப்பு விழாவில் குழந்தைகள் மற்றும் பெண்கள் மேம்பாட்டுத்துறை மத்திய அமைச்சர் மாண்புமிகு அன்னபூர்ணாதேவி அவர்களிடம் தங்கப்பதக்கம் பெற்ற H. பிரியதர்சினி அவர்களுக்கும், இத்தாலி நேப்பிள்ஸ் நகரில் Italy Half Marathan-21 KM நடைபெற்ற போட்டியில் கலந்துகொண்டு வெற்றிபெற்ற திரு மீனாட்சி சுந்தரம் அவர்களுக்கும் வாழ்த்துகள்.

மதுரை, சிறுகுடி அ.வ.ந. சங்க ஆண்டுவிழா நிகழ்வு கட்டுரைகள் நன்றாக அமையப்பெற்று இருந்தன.

S.S. மணியன் அவர்களின் "கடல்கொண்ட பூம்புகார்" நகரத்தின் ஆராய்ச்சி கட்டுரை விளக்கங்கள் மாணவ-மாணவிகளுக்கும், மற்றவர்களுக்கும் அறிந்து கொள்வதற்கு பயன் உள்ளதாக இருந்தது. திருமதி ஆனந்த செல்வம் அவர்களின் "மனித நேயத்தை விதைத்துக் கொண்டே இருப்போம்" என்ற கருத்துடன் கட்டுரை எழுதியிருந்தது வாசகர்களுக்கு நல்ல படைப்பு. குரலில் நமது குழந்தைகளின் ஓவியங்களுக்கு ஒரு பக்கம் ஒதுக்கி வெளியிட்டதற்கு நன்றி. AVN Youth Federation அமைப்பைக் கல்லூரிக்குச் செல்லும் மாணவர்களும், இதர மாணவர்களும் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். இன்னும் பல செய்தி தொகுப்புகளுடன் 2025 மார்ச் மாத குரல் வாசகர்கள் அறிந்து கொள்வதற்கு நன்றாக இருந்தது. ஆசிரியர் குழுவிற்கு வாழ்த்துகள்.



## சித்தர்கள் பௌர்ணமி பூஜை

ஆலவயல் அருவியூர் வடக்குவளவு நகரத்தார் சங்கம் சார்பாக 13-03-2025 அன்று வியாழக்கிழமை 158வது சித்தர்கள் பௌர்ணமி பூஜை சிறப்பாக கொண்டாடப்பட்டது. பூஜையில் கலந்து கொண்ட பக்தர்கள் அனைவருக்கும் அன்னதானம் வழங்கப்பட்டது.

**தகவல் : திரு பழ. சொக்கலிங்கன், செய்தித் தொடர்பாளர், ஆலவயல்.**

## தெரிந்து கொள்வோம்

M. தீப அலங்கார், M.Sc., திண்டுக்கல்

சாலையில் பயணிக்கும் போது ஒவ்வொரு நிறத்தில் இருக்கும் மைல் கற்களை பார்த்திருப்போம். அதில் செல்லும் தூரம் மற்றும் சேர வேண்டிய இடத்தை குறிப்பிட்டு இருப்பார்கள். இதில் உள்ள நிறங்கள் எதை குறிக்கிறது தெரியுமா?

❖ மஞ்சள் மற்றும் வெள்ளை கலவை என்றால் தேசிய நெடுஞ்சாலை.

❖ கரும்பச்சை மற்றும் வெள்ளை கலவை என்றால் மாநில நெடுஞ்சாலை.

❖ கறுப்பு மற்றும் வெள்ளை கலவை என்றால் நகர மற்றும் மாவட்ட சாலை.

❖ சிவப்பு மற்றும் வெள்ளை கலவை என்றால் பஞ்சாயத்து சாலை.



## முதல் பெண்மணிகள்

1. தமிழகத்தின் முதல் பெண் முதலமைச்சர் திருமதி ஜானகி ராமச்சந்திரன்
2. தமிழகத்தின் முதல் பெண் மருத்துவர் டாக்டர் முத்துலெட்சுமி ரெட்டி
3. விண்வெளி சென்ற முதல் இந்திய பெண் கல்பனா சாவ்லா
4. எவரெஸ்ட் சிகரத்தை அடைந்த முதல் பெண் பச்சேந்திரி பால்
5. ஒலிம்பிக்கில் பதக்கம் பெற்ற முதல் இந்தியப் பெண் கர்ணம் மல்லேஸ்வரி.

**– பெ. சிவன்ஜோதி, தஞ்சாவூர்**

Book Post - Printed Matter

To

From

அ.வ.ந. கல்வி வளர்ச்சிக் கழகம்
3, முதல் குறுக்குத் தெரு,
அழகப்பா காம்ப்ளக்ஸ் பின்புறம்,
மெயின்ரோடு ரோடு, **பொன்னமராவதி,**
புதுக்கோட்டை மாவட்டம் - 622 407.

SURYA SVK Cell : 98421 24415